# நன்னகர் வெண்பா
# திருநீர்மலைச் சிலேடை வெண்பா


*பதிப்பாசிரியர்கள்*

**பேராசிரியர். ம.வே. பசுபதி**

**ஞா. மேகலா.** எம்.ஏ., எம்.பில்.



**டாக்டர். உ.வே.சா. நூல்நிலையம்**

2, அருண்டேல் கடற்கரைச்சாலை

பெசன்ட்நகர்

சென்னை - 600 090.

**2007**

# பதிப்புரை

தென்றல் அசையச் செழுங்கமலத் தோதிமம்வேய்
நின்றாடு கூத்தர்நீள் நீர்மலையே - எண்பேர்
கருவடிவாய்க் காட்டினான் காணா மறையை
உருவடிவாய்க் காட்டினா னூர்.

திருநீர்மலைச் சிலேடைவெண்பா

நன்னகர் வெண்பா, திருநீர்மலைச் சிலேடைவெண்பா ஆகிய வெண்பா நூற்கள் இரண்டும் ஓலைச்சுவடியிலிருந்து முதன் முதலாக அச்சிற்பதிப்பிக்கப் பெற்று வெளிவருகின்றன. நன்னகர் வெண்பா நூலும், சிலேடை வெண்பா அமைதியுடையதேயாகும்.

பதினெட்டுப் பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் இத்தகு ஊர்ப்பேர்ச் சிலேடை வெண்பா நூற்கள் பல்கின. இவை நேரிசை வெண்பா யாப்புடையன. ஓரோவழி இன்னிசை வெண்பா விரவுதலுமுண்டு. மூன்றாமடியின் முதற்சீர், அன்றி முதலிரு சீர்கள் சிலேடித்து நான்காமடியின் முதற்சீர், அன்றி முதலிருசீர்க்கண் வரப்பெறுதல் பெரும்பான்மை. முதலடிக்கண் இருபொருள் நிறுத்தி இரண்டாமடிக்கண் சிலேடித்த சொற்பெய்தலுமுண்டு. சிலேடை வெண்பா நூல்கள் கற்பனை வளமும், பக்தி நலனும் கலந்தளிப்பனவாகும்.

நன்னகர் வெண்பா நூற்றுப் பன்னிரண்டு பாடல்களை உடையது. சைவ இலக்கியம். ஞானசம்பந்தரின் முதற்றிருமுறைப் பதிகத்தால் திருக்குற்றாலத்தை நன்னகரென அறியலாம். இந்நூலில் ஏழாம்பாடலும் அகச்சான்றாய் அமைகிறது. நூலாசிரியர் பெயர் தெரிந்திலது.

திருநீர்மலைச் சிலேடை வெண்பா நூறு பாடல்களும் இரு காப்புச் செய்யுட்களும் கொண்டது. முதற் செய்யுள் விநாயக வணக்கமாகும். வைணவ இலக்கியத்துள் விநாயக வணக்கம் வருதல் மகிழ்தற்குரியதாகும். திருவரங்கத்துள் தும்பிக்கை

ஆழ்வாராக விநாயகப்பெருமான் அருள் பாலிப்பதும் அப்பெருமான் பேரில் காளமேகம் கவி சொன்னதும் ஈண்டிணைத்துக் கருதற்பாலனவாம். திருநீர்மலைச் சிலேடை வெண்பாவின் ஆசிரியர் பெயரும் தெரிந்திலது. அடைப்புக்குறிக்குள் உள்ளவை, சிதைவிடத்துச் சொற்கள் அசைச்சீர்கள் அனுமானிக்கப் பெற்றன.

ஓலைச்சுவடியிலிருந்து இந்நூலை அச்சிற் பதிப்பித்து வெளியிடத் தெரிவு செய்தளித்தவர்கள் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் முனைவர். இ. சுந்தரமூர்த்தி, சென்னைப்பல்கலைக் கழகத் தமிழ்மொழித் துறைத் தலைவர் முனைவர் வ. ஜெயதேவன், சென்னைப் பல்கலைக்கழகத் தமிழிலக்கியத்துறைத் தலைவர் முனைவர். வீ. அரசு ஆகிய வல்லுநர்கள் ஆவர். அவர்கட்கு என் நன்றிகள்.

இத்தகு நல்ல நூல் வெளிவருவதற்குப் பேரார்வத்துடன் உற்சாகப்படுத்தி வரும் இந்நூலகக் குழுத்தலைவர் டாக்டர். வா. செ. குழந்தைசாமி அவர்கட்கும், டாக்டர். உ. வே. சாமிநாதையர் அவர்களின் கொள்ளுப்பேரர் திரு. சு. வெங்கடகிருஷ்ணன் அவர்கட்கும், இந்நூலகச் செயற்குழு, பொதுக்குழு உறுப்பினர்களாகிய அறிஞர் பெருமக்கட்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலைப் பதிப்புச் செய்ய உறுதுணையாக இருந்த ஜெ. சந்திரிகா (மெய்ப்பு ஒப்பீட்டாளர்), இரா. லோபாஷினி (படியெடுப்பவர்), நா. இந்திராதேவி (படியெடுப்பவர்) கோ. சத்தியவாணி (கணினித் தட்டச்சர்) ஆகியோருக்கு என் நல்வாழ்த்துகள் உரியன.

*டாக்டர் உ. வே. சா. நூல்நிலையம்*
*சென்னை - 600 090.*
*14.06.07*

*ம. வே. பசுபதி*
*காப்பாட்சியர்*

சிவமயம்

# நன்னகர் வெண்பா

இன்னகர்வெண் பாரா(து)என் னையும்ஆட் கொண்டபிரான்
நன்னகர்வெண் பாநான்ஆட் கொண்டேன் - முன்னமுதம்
மந்தகும்ப மாமுனியுண்டு ஆழ்கடலைத் தானுமுண்ணப்
போந்தகும்ப மாமுனியைப் போல். (1)

பூவாய வாவிகளும் போந்தார் திருமுகமும்
நாவார் கவிதைவரு நன்னகரே - காவிவிழிக்
காமக்கோட் டத்தியார் காந்தரமி ராவணமா
நாமக்கோட் டத்தியார் நாடு. (2)

வேட்டங்கு வந்தவரும் மேவுமனைக் காட்சிகளும்
நாட்டம் தழைக்கவைந்த நன்னகரே - கோட்டுப்
பொருப்பரசு பாணியார் பொற்றொடிக்கைப் பற்றும்
திருப்பரசு பாணியார் சேர்வு. (3)

காமவே லைக்கினியர் கணங்களும்நீர்த் தண்குளமும்
நாமவே லைக்கடுக்கும் நன்னகரே - சாமதிறம்
மின்னுதிரி கூடத்தான் வீற்றிருந்த நால்வேதம்
பன்னுதிரி கூடத்தான் பற்று. (4)

பண்பாங் கிளைஞருக்கும் பாங்கார்ந்த போதனர்க்கும்
நண்பாம் தவம்உதவும் நன்னகரே – விண்பொலிந்த
மேருக்கோ தண்டவரன் வேதம் பதம்பிரித்துச்
சீருக்கோ தண்டவரன் சேர்வு. (5)

சேமக் கலைக்கடலும் தென்பால் அகத்தியனும்
நாமத் தினால்கலக்கு நன்னகரே - மாமறைதேர்
தீர்த்த நயனத்தான் சிலைக்காம வேள்துங்கப்
பார்த்த நயனத்தான் பதி. (6)

பாடீர குங்குமப யோதரமும் பூதரமும்
நாடீர வாரமுதிர் நன்னகரே – ஓடிக்
கருக்குற்றா லத்துறைவார் கண்டாண்டர் போற்றத்
திருக்குற்றா லத்துறைவார் சேர்வு. (7)

ஆற்றிக் கரைநின்ற ஆளுமக லாவளமும்
நாற்றிக் கரைகாக்கும் நன்னகரே – ஏற்ற
கரகமண்ட லத்தினான் கைதொழும் கோடீரத்
துரகமண்ட லத்தினான் ஊர். (8)

தேடும் தெரிசனத்தால் செல்வத்தால் யாவருக்கும்
நாடும் கதிகொடுக்கும் நன்னகரே – ஆடல்புரி
தேவசபா மந்திரத்தார் சிந்திக்கச் செல்வமிகு
மாவசபா மந்திரத்தார் வாழ்வு. (9)

ஆக விலைமடவார் அல்குலுக்கும் தொல்கிளைக்கு
நாக படமிசையா நன்னகரே – பாகம்
ஒருத்திக் களித்தார் ஒருத்தியைக் கோடீரத்
திருத்திக் களித்தார் இடம். (10)

பூணும்வில்லு மாவம் புதுமணத்த பூவையரும்
நாணைநாட் டம்புதைக்கும் நன்னகரே – காணில்
உருவக் கவடத்தார் உட்குமொழி நல்கும்
திருவக் கவடத்தார் சேர்வு. (11)

பாரமென டிக்கவும்ஐம் பான்முடிக்க வுஞ்சிறுமின்
நாரமென கைதனைவை நன்னகரே – தேருமறை
மந்திரவா வாகனத்தான் மாற்றார் சமரமுக
தந்திரவா வாகனத்தான் சார்பு. (12)

மொய்வளையார் கைக்கும்முனை வேல்விழிக் கும்அஞ்சி
நவ்விக் கணந்திரிவார் நன்னகரே – பைவிரிநா
கம்கரப்பஞ் சாக்கரத்தார் கற்பாந்த ரங்களினும்
மங்கரப்பஞ் சக்கரத்தார் வைப்பு. (13)

மாகமுகில் கண்டுவெற்பில் வண்டுகண்டு பூங்காவில்
நாகம(து) (போலாகும்) நன்னகரே – மேகமொக்கும்
கைநாகத் தார்உரியார் கற்றைநிலா வைத்தீட்டும்
பைநாகத் தார்உரியார் பற்று. (14)

கொம்பிறகால் கோல(க்) (கொம்பார்) குலமயிலும்
நம்பிக்கள் வந்துஅழைக்கும் நன்னகரே – அம்புக்காற்
குற்றாலத் தெம்மான் குடிலமுலைத் தான்வணங்கும்
குற்றாலத் தெம்மான் குடி. (15)

சூரத்(தை) வெட்டைகளில் தூவிஅன்னம் பாலுணவின்
நாரத்தை வேறாக்கு நன்னகரே – தேருமறைப்
பண்பகவ னாதிபனார் பற்றிய பொற்றுணர்ப்பூஞ்
செண்பகவ னாதிபனார் சேர்வு. (16)

வேட்களமன் அன்னவரும் மென்மலர்ப்பூஞ் சோலைகளும்
நாட்கா முகந்திருத்து நன்னகரே – வேட்கோவா
நீலகண்ட மானா நிலைமைக்(கு) அருள்வழங்கி
மேலகண்ட மானான் விருப்பு. (17)

சாறயர்வ ராடுந் தடஞ்சுனையும் தண்பனையும்
நாறுமுடிப் பூமிதக்கும் நன்னகரே – மாறன்
சினக்கவலை மாற்றடியார் தீவினைதீர்த்(து) எங்கள்
மனக்கவலை மாற்றடியார் வைப்பு. (18)

மின்கால் வெழில்முகடும் வேட்டவர்பால் சேடியரும்
நன்கா தலைஉரைக்கும் நன்னகரே – பொன்கால்
தடவரவக் கங்கணத்தான் சாத்திமகிழ்ந்(து) ஏத்தும்
விடவரவக் கங்கணத்தான் வீடு. (19)

கோயில் திருநிலைகால் கோபுரமும் மாமுகிலும்
ஞாயிற்றை வந்தடுக்கும் நன்னகரே – மாயோன்
வருந்தவிடம் என்றார் வகதி சிவயோகி
இருந்தவிடம் என்றார் இருப்பு. (20)

..............................................................

நாமா சலமொழியும் நன்னகரே – தாமே
எமைஆட்கொண் டார்அணிவார்ந்(து) ஏந்தும்இளங் கொங்கை
உமையாட்கொண் டாரவார் ஊர். (21)

செந்தா மரையில் திரையில் கழிப்புறத்தில்
நந்தா வனநகைக்கும் நன்னகரே – தந்தாள்
நினைக்குமறி வைத்தகையார் நின்றுகொண்ட ஏங்கக்
கனைக்குமறி வைத்தகையார் காப்பு. (22)

வாட்டம் செயும்இடையார் மார்பும்வத னாம்புயமும்
நாட்டம் கரும்பிணையா நன்னகரே – வேட்டவர்க்கு
முத்திநித்த முற்றா முரசுமுழங் கும்அண்ட
பத்திநித்த முற்றார் பதி. (23)

மைந்தர்க்குத் தூணும் வடவருவித் தீர்த்தமுமே
நந்தாக்கு மாசெறிப்பு நன்னகரே – கந்தமலை
வாரத் திருப்பாட்டார் மாதவத்தோர் ஓதியதே
வாரத் திருப்பாட்டார் வைப்பு. (24)

முன்கிளையார் கைநிரைப்ப மூத்தோரும் இன்புறவே
நன்கிளையார் பண்புணர்த்தும் நன்னகரே – இன்கதிவீட்(டு)
ஆனந்த மாக்கடலார் அஞ்சலார் முப்புரத்தை
ஆனந்த மாக்கடலார் வைப்பு. (25)

பானா வலர்பொழுதும் பங்கேருகத் தடமும்
நானா கலைகடத்தும் நன்னகரே – வானோர்
வணங்கும் பெருமாள் மலைமகளும் தாமும்
இணங்கும் பெருமா ளிகை. (26)

முத்தனையார் ஊடல் முடிவில்முள ரிப்பொகுட்டி
நத்தினமுத் தங்கொடுக்கும் நன்னகரே – பத்தி
பழுத்தமனக் காப்பார் படைவிசய நங்கை
முழுத்தமனக் காப்பார் முகப்பு. (27)

சேரும் சுகந்தாதி யுமேதி யுமாலை
நாரம் கிடந்துகட்டும் நன்னகரே – வார்சடைக்கே
சேரப் பினாகத்தான் சிக்கெனப் பினாகத்தான்
வீரப் பினாகத்தான் வெற்பு. (28)

செல்குரவோர் சேர்வதனாற் சேர்ந்தோர் செறிப்பதனால்
நல்குரவோர் செல்வமெனும் நன்னகரே – மல்குமலர்ப்
போதும் அருவியாப் பொங்குபொங்கு ஞாகடலென்(று)
ஓதும் அருவியார் ஊர். (29)

கொம்பனை தாமும் குவட்டருவித் தீர்த்தமுமே
நம்பா தகந்துலைக்கும் நன்னகரே – செம்பாதி
பச்சென்று வந்தார் பரவையார் சுந்தரரே
வச்சென்று வந்தார் மனை. (30)

வேண்மாரி கூடாரம் வேட்டமனை ஏழாநீர்
நாண்மா தவிகமைக்கும் நன்னகரே — தோண்மாலை
சூட்டியமா தாண்டவத்தார் சுத்தவெளி அம்பலத்தே
நாட்டியமா தாண்டவத்தார் காப்பு. (31)

ஆழியபாட் டாவழுத்த எப்பவருங் கோபுரமும்
நாழிகைவட் டங்கறங்கூர் நன்னகரே – தகைமைநறாத்
தேக்குமடல் வணங்கினான் தேய்ந்தொழியக் காய்ந்துசண்டன்
தாக்குமடல் வணங்கினான் சார்பு. (32)

நீளவார வேறு நெடுஞ்செல்வர் இல்லுநெடு
நாளகம லத்தடங்கும் நன்னகரே – தாளால்
நடுத்துவைத்த வத்தனார் நாயகி தாளம்மிக
கெடுத்துவைத்த வத்தனார் இல். (33)

ஆடுமரு விக்கிரியும் அன்னமன்னார் நன்னுதலும்
நாடும் அதிசயிக்கும் நன்னகரே – நீடியசீர்
மேதகரு ணாசலத்தான் வெய்யவனை வெப்பொழிக்கும்
சீதகரு ணாசலத்தான் சேர்வு. (34)

சீகர் கடாமும் தெலுங்கர்கலி யாணமுமே
நாகவலி யால்திகழும் நன்னகரே – பாகமுறை
வாரணிய வாசத்தார் மாமலர்கள் வாய்த்தசெண்ப
காரணிய வாசத்தார் காப்பு. (35)

தேங்குழலாள் ............ காமம்பா ராட்டிடமும்
நாங்கணவாய்ப் புள்ளளிக்கும் நன்னகரே – பூங்கடப்பந்
தார்த்தனைய னத்தன்(று) அளற்குமிளி நெற்றிகிழியத்
தார்த்தனைய னத்த னகம். (36)

பொன்றாத புத்திரனும் புத்திரனைப் பெற்றவனும்
நன்றாய் வரத்துதிக்கும் நன்னகரே – ஒன்றிரண்டாய்க்
கீறியக லாமதியார் கேளரனார் அன்பெனுந்தேன்
ஊறியக லாமதியார் ஊர். (37)

மோகநிலா முற்றத்தும் முற்றிழையார் சிற்றிலினும்
நாகநிலாத் தேற்றெறிக்கும் நன்னகரே – நாகம்
உடைக்காட்டைக் காட்டினார் ஓதுகவி வாதிற்
சடைக்காட்டைக் காட்டினார் சார்பு. (38)

செம்பொன்மணிக் கோயிலையும் தெய்வப் பொருப்பையுமுன்
நம்புகும்ப மாமுனிசூழ் நன்னகரே – நம்பி
விடிலசடி லத்தனார் மின்னகு விசால
குடிலசடி லத்தனார் கோடு. (39)

ஏலுமறைப் பெண்ணவனும்ஏந்திழையார் கூந்தல்வண்டும்
நாலுமலர் முகந்தேர் நன்னகரே – பால்போல்
முழுகடலைக் காட்டினார் முலைப்பெண்ணி யந்தாட்கு
எழுகடலைக் காட்டினார் இல். (40)

விம்பவா யார்நடையும் மேலோரும் சீர்மருவ
நம்பினா லாசரிக்கும் நன்னகரே - சிம்புளாய்
ஆளியுடன் ஆடினான் அன்றாலங் காட்டிலடற்
காளியுடன் ஆடினான் காப்பு. (41)

மேகமன்ன மேதியுடன் வீணைவிஞ்சை வாணருடன்
நாகரிக ரும்பயிலும் நன்னகரே - மோக
பவசிர மாற்றினாரீ பாடரங்கத் தாண்டா
வணசிரம மாற்றினார் சார்பு. (42)

செல்வமலி கோவிலுக்கும் தெய்வஅமிர் திற்குமிக்க
நல்லவச னந்தனிகார் நன்னகரே - புல்லார்
தெரியும் பரிசெய்தார் தென்னர்கோன் காண
நரியும் பரிசெய்தார் நாடு. (43)

இற்சாதி காட்டி இசைவண் டினமுழக்க
நற்சாதி கண்மணக்கும் நன்னகரே - விற்சாதிச்
சாதரூ பச்சிலம்பார் தாண்டவம்செ யும்சரண
வேதரூ பச்சிலம்பார் வீடு. (44)

காவாங் கதிருக்குங் காலை கடந்தெருவாய்
நாலாம் பலுமுகைக்கும் நன்னகரே – வாலியைத்தேர்
குஞ்சரத்தோற் குப்பாயாங் கோட்டுவிண்ணான் பூட்டுமத
குஞ்சரத்தோற் குப்பாயாங் கோடு. (45)

சந்தனவ னப்பொருப்புஞ் சாரலுங்கா லாமயிலான்
நந்தனவ னங்குலவும் நன்னகரே – நந்தாதோர்
தம்பவன பாரவினார் சந்திரகிரி வாசகும்ப
சம்பவன பாரவினார் சார்பு. (46)

உள்ளாற்றுப் பாடலினும் ஒண்சங்க வீதியினும்
நள்ளாற்றுச் சந்தமுந்தும் நன்னகரே – தெள்ளியமுத்
துப்பந் தரையளித்தார் சொற்கவிக்குக் கொற்கையர்கோன்
ஒப்பந் தரையளித்தார் ஊர். (47)

புண்படா வேல்விழியார் பூண்முலையும் பேரவையும்
நண்படா மூடநிலா நன்னகரே – பண்படாச்
சாரங்க பாணியனார் சந்திரச டாமகுடம்
சாரங்க பாணியினார் சார்பு. (48)

பூணவிர்தோள் வில்லியரும் பொற்றடியைப் பெற்றவரும்
நாணெறிதாம் பார்த்துவந்த நன்னகரே – பூணுநெறி
பூண்டரங்கத் தாண்டவனார் புண்டரிகக் கண்புனைகாற்
பாண்டரங்கத் தாண்டவனார் பற்று. (49)

ஆடுசங்கூர் சைவல்த்தா லப்பூதி யொப்பாரால்
நாடுதிங்க ளூரின்னைய நன்னகரே – ஓடி
நரககங்க ணத்தினால் நண்ணிதுங் கைதூக்கும்
உரககங்க ணத்தினான் ஊர். (50)

ஆடகமு கப்பவரு மப்பரத சாத்திரமும்
நாடகமு கப்பவரு நன்னகரே – நீடுத்தி
அங்கைக் கொடுக்கின்றார் அன்றிறைஞ்சப் பார்ப்பதிக்குப்
பங்கைக் கொடுக்கின்றார் பற்று. (51)

பாவுடைய நாவலர்பாற் பண்புடைய பானமதி
நாவனக ரானைநேர் நன்னகரே – கோவைத்
தரளமணி கந்தரத்தர் சந்திரசடா மோலிக்
கரளமணி கந்தரத்தர் காப்பு. (52)

மாலெய்து மாவுரு மாணாரு மஞ்சம்பி
நாலெய்தி வீதிபகிர் நன்னகரே – ஞாலத்
தபையசர ணாரவிந்த ராவெணமால் சேர்ந்த
உபையசர ணாரவிந்த ரூர். (53)

மாமா தவரகமு மாப்புலவர் வானகமும்
நாமாதி நாட்டமிகு நன்னகரே – வாமாத
(கரத்)தேக மானார் கடவுண்மறை யாமம்
தரத்தேக மானார் செறிவு. (54)

கூட்டார் நறையளிக்கும் கோகிலமன் னார்இசைக்கும்
நாட்டார் மடலுறைக்கும் நன்னகரே – வேட்டொருபால்
மாதாள வாசலான் வாசுகிகூர்ந் தேந்தவந்த
பாதாள வாசலான் பற்று. (55)

காவலர்பாட் டுக்குளமும் கன்னிப் படைஞெண்டும்
நாவலரும் கள்கூடு நன்னகரே – மேவுதன
பாரத் தடாகத்தார் பாயருவிச் சித்திரநதி
தீரத் தடாகத்தார் சேர்வு. (56)

ஈரத்தண் பாதிரிபோல் ஏந்துசெம்பொன் அம்மனைபோல்
நாரத்தங் கோடுகனி நன்னகரே - சோருமெளி
ஏனீற்றுக் காப்பார் இளங்கா நிலவெறிக்கும்
பானீற்றுக் காப்பார் பதி. (57)

மால்வார வாச்சிரம வாய்ப்புமல ரோடைகளும்
நால்வராற் சொல்லேந்து நன்னகரே - மேல்வாக்குப்
பாவனா சத்திதந்தான் பாலித்த தேன்போலப்
பாவனா சத்திதந்தான் பற்று. (58)

தூலஞ்சேர் கொங்கைநல்லார் சொல்வாணர் காவியங்கள்
நாலஞ்சா ரம்பொழியும் நன்னகரே - பாலிருக்கும்
கானத்தி மால்வரையார் கண்ணப்ப னன்புசெயும்
கானத்தி மால்வரையார் காப்பு. (59)

செந்தா மரையுமதிர் சேருமஞ்சு ருப்பும்வண்டா
நந்தா முறுக்கவிழும் நன்னகரே - முந்த
விசைய னடித்தான் வெறுங்காட்டு வெம்பேய்க்(கு)
இசைய நடித்தான் இடம். (60)

கோலமலர்க் காவிலிளம் கொம்புமின்சொல் நாவலரும்
நாலுகவி கொண்டாடும் நன்னகரே – மாலும்
தியிலாய வோதிமத்தான் சேட்பறந்தும் காணாக்
கயிலாய வோதிமத்தான் காப்பு. (61)

பூட்டார் புரவி முகமும் புருடரும்வா
நாட்டாரைத் தேசிநிகர் நன்னகரே – நாட்டோறும்
ஏறுதவ வேணியார் ஏத்தப் பகீரதனுக்கு
ஆறுதவ வேணியார் ஆர்ப்பு. (62)

மோக மடவார் முலையுமுள ரிச்சுரும்பு
நாக மருப்பொசிக்கும் நன்னகரே – ஏகபாந்
தாமத் திருத்துடையார் தண்டைக்காற் சேமிருக்கும்
வாமத் திருத்துடையார் வாழ்வு. (63)

கொண்டல்வர வாற்குல ............வாற் கமலமுகை
குண்டளையச் சேறுவைக்கும் நன்னகரே – பண்டலைந்த
மாசங்க வீதியினார் வந்துசுக வாழ்வுபெறு
மாசங்க வீதியினார் வைப்பு. (64)

தோகைமயில் சோலைதொறும் சுற்றுபகல் சாலைதொறும்
நாகமுனி காரியஞ்செய் நன்னகரே – தோகை
வரவேள்வி நாயகனார் வாய்மழலை யாமம்
திரவேள்வி நாயகனார் சேர்வு. (65)

கல்லாரச் செய்யும் கவரியுங்கை யுந்தனத்து
நல்லாரஞ் சேர்த்திரட்டு நன்னகரே – யெல்லெறிக்கு
மாதிகிரி அத்தன் வணங்குதிரி கூடமென்னு
மாதி கிரியத்தன் அகம். (66)

மோகமுனி வோர்உடம்பு மொய்மலர்ப்பூங் காவுமுறை
ஞானபா தந்திளைக்கும் நன்னகரே – வானில்
நவமதுகங் கைத்தலத்தான் நற்றவத்தோர் ஆடும்
சிவமதுகங் கைத்தலத்தான் சேர்வு. (67)

காவிநயங் காட்டுநெடுங் கண்ணாரும் காளையரும்
நாவிநயந் தேர்ந்துரைக்கும் நன்னகரே – கோவக்
கொடியநர கேசரியார் கொல்வெறிதீர்த் தென்னைப்
படியநர கேசரியார் பற்று. (68)

சந்ததம்நான் சேவிக்கத் தாம்பரவீ டெய்தநமி
நந்திஅடி கள்பணியும் நன்னகரே – ஐந்துமைந்தும்
பேரா நடனத்தின் பேசரிய மன்றில்
தீரா நடனத்தின் சேர்வு. (69)

பொற்சந்தச் சாணைகளில் பொன்னன்னார் காதலர்முன்
நற்சந் தனமுரைக்கும் நன்னகரே – சொற்சந்தத்
தைந்துநா தங்கடந்தார் ஆடலுக்குக் கூடலுக்குள்
விந்துநா தங்கடந்தார் வீடு. (70)

அந்தமிலா கேண்மையின் ஆயிரந்தோட் டம்புயத்தான்
நந்தமார் விற்கிளைய நன்னகரே – முந்திருக்கைக்
கோகனக மால்வரையார் கூடரிய கோதண்ட
மாகனக மால்வரையார் வைப்பு. (71)

பானாட்டக் கற்றார் பரதகலை கற்றார்தாம்
நானாட்டி யல்நவிற்று நன்னகரே – மானடஞ்செய்
பொன்னம் பலவிருப்பார் புன்மையேன் போற்றியுய
இன்னம் பலவிருப்பார் இல். (72)

சொன்முத்த நல்லவரும் தூநீர்க் கழனியுங்கல்
நன்முத் தமிழ்தீட்டும் நன்னகரே – வன்ம
வினைக்குறும்ப லாவாய்ந்தார் மெய்நெறிக்கச் சார்பஞ்
சினைக்குறும்ப லாவாய்ந்தார் சேர்வு. (73)

தாட்பார்க்கு மங்கையரால் தார்த்தலைவ லார்வயல்போய்
ஞாட்பார்த்தார் தாமதிக்கும் நன்னகரே – கோட்புலிமான்
இன்றோல் உடையார் இரண்டா யிரங்கோட்டு
வன்றோல் உடையார் மரபு. (74)

போகியர்பால் பூங்கணையும் போர்வேந்தன் தேர்மறுகு
நாக மதநிறைக்கும் நன்னகரே – யோகநிலைத்
தேகாம் பரனார் திகம்பரனார் அம்பரனார்
ஏகாம் பரனார் இடம். (75)

கொத்தேறு தாமரையும் கோனகர்பால் பெண்களுமன்
நத்தேறி முத்தமிடும் நன்னகரே – புத்தர்
பலவாக் கிழிவைத்தான் பற்றுதமிழ்ப் பாவிற்(கு)
உலவாக் கிழிவைத்தான் ஊர். (76)

ஆடலிளை ஞர்கலியர் நாவளத் தால்உளத்தால்
நாடுமுனி பற்றிவரும் நன்னகரே – மூடருடன்
கூடலரைச் சாரலார் கோடல்மண் ணாறுதிரி
கூடலரைச் சாரலார் கோடு. (77)

பூகமணிக் கந்தரத்தார் போர்விழியும் பூஞ்சுரும்பும்
நாகமணிக் கொப்பிடறும் நன்னகரே – ஏகமாம்
அவ்வியத்த மானா ரசலகுல வல்லியெனும்
நவ்வியத்த மானார் நகர். (78)

தென்காற் குறிஞ்சியுஞ்செந் தேன்கால் மருதவைப்பு
நன்கால் முருகுறைந்த நன்னகரே – புன்கணுறு
மாபா தகமலத்தார் வந்தடைந்தா லும்திரும்புஞ்
சீபா தகமலத்தார் சேர்வு. (79)

மைக்கேச மாதருக்கும் மாப்புலவ ருக்குமதி
நக்கீர நாகமொப்பாம் நன்னகரே – திக்கென்று
பேசுபத வத்திரத்தார் போவலிப்பார்த் தற்களித்த
பாசுபத வத்திரத்தார் பற்று. (80)

அஞ்சொலவர் முத்தினந்தீர்ந் தாதிகுர வன்சொல்வன்
நஞ்சிராப் பேர்தாங்கும் நன்னகரே – வஞ்சநெஞ்சில்
வைக்கத் திருந்தார் வரதரணி பீடநிலைப்
பக்கத் திருந்தார் பதி. (81)

அத்தே ரிரவிவர வன்பரவர் மாதர்நளி
னத்தே முகமலரும் நன்னகரே – முத்தியுளா
நத்தவி பூதியினார் ஞாலமுய்ய மீனவன்பா
வத்தவி பூதியினார் சார்பு. (82)

காப்புடைய கிள்ளைகளும் காவலரும் கற்றோர்பால்
நாப்பண் இருக்கைநவில் நன்னகரே – யாப்பினத்தூ
டம்புலித்தோற் றங்கரையார் ஆறுகாட் டுஞ்சடையார்
வெம்புலித்தோற் றங்கரையார் வீடு. (83)

பேதம் கடந்தபெரி யோர்மனமும் பெய்முகிலும்
நாதம் கடந்ததிரு நன்னகரே – ஓதிமைய
மாதிருந்த வாமத்தர் மாறா நடமியற்றி
மாதிருந்த வாமத்தார் வைப்பு. (84)

சந்தாடு நீர்த்திரைமேல் தண்பிறைபோற் றார்கைபோல்
(நந்தாடு) தாவனம(ரா்) நன்னகரே – சிந்தையன்பு
பொங்கக் குழையார்முன் போதா புனைதாளச்
சங்கக் குழையார் தலம். (85)

மின்னகுவேற் கண்ணால் விழைந்தாரோ நாட்பிரிவன்
நன்னகையார் அம்பொடிக்கும் நன்னகரே – பன்னகநாண்
பூட்டுதனுச் செங்கையினான் பொன்னசலம் போல்வடிவு
காட்டுதனுச் செங்கையினான் காப்பு. (86)

சீதப் பிறைதவழும் செண்பகக்கா வும்தனமும்
நாதப் பிறையிசையாம் நன்னகரே – வேத
வரசிரக பாலனார் வந்தனைக்கு வந்த
கரசிரக பாலனார் காப்பு. (87)

வாளாந் தவமும் மருதவைப்பும் தாம்மூன்று
நாளா மயனிறைசெய் நன்னகரே – யாளியஞ்சும்
அச்சரவக் கோவணத்தார் ஆயிரப ணாமகுட
நச்சரவக் கோவணத்தார் நாடு. (88)

மாகனக மாளிகையும் வண்கழுநீர்த் தண்குளமும்
நாகரிகர் ஆனிறையும் நன்னகரே – சேகரமேல்
வெள்ளமுந்து மாறுடையார் வேடங்கண்(டு) அன்புசெய்யார்க்(கு)
உள்ளமுந்து மாறுடையார் ஊர். (89)

கோட்டே(று) எருமைகயம்கொண்டுமின்னார் மூரல்கொண்டு
நாட்டேற முத்திணையா நன்னகரே – தீட்டரிய
பாரதச காயனார் பன்னரிய பாதயுக
சாரதச காயனார் சார்பு. (90)

போற்றிசைக்கும் மாந்தர் புலநிலங்கள் பொன்கொழித்து
நாற்றிசைக்கும் மாதரவா நன்னகரே – கீற்று
நிலவிதழி யாரநிறை சடையார் பாகத்
திலவிதழி யார ரிடம். (91)

கோண்மா மதிக்கொழுந்தும் கோபுரமும் வெள்குடையான்
நாண்மா முகிலனுகு நன்னகரே – நீண்மறையோன்
பீதாம் பரவரியார் பின்றுவட ஞானமன்றின்
மீதாம் பரவரியார் வீடு. (92)

வன்புலம்வென் றோர்தொடர்பால் வந்தவிருந் தாற்றிநந்தா
நன்பணியார் அஞ்சமைக்கும் நன்னகரே – மின்போல்
இடைமா த்துவசத்தால் ஏழுலகும் காத்த
விடைமா துவசத்தான் வீடு. (93)

பொன்பார் எனப்பொலிந்த பொற்பும்வயற் பக்கமுந்தென்
நன்பார்கொண் டாடுமிக்கார் நன்னகரே – அன்பு
கடனாகப் பூணினார் கண்ணினும் வந்தெய்தும்
விடனாகப் பூணினார் வெற்பு. (94)

தேஞ்சேர்க்கு நல்லார் திருநுதலும் செய்யுழவும்
நாஞ்சிலைச்சங் கஞ்சலிக்கும் நன்னகரே – தாம்சுழற்றும்
சூலப் படைத்தலையார் சுக்ககங்கா ளத்தரென்னை
சாலப் படைத்தலையார் சார்பு. (95)

பாவிரச வாதும்இரப் பாக்குணவும் பால்விரவி
நாவிக் கருளிலகும் நன்னகரே – காவலர்நா(டு)
ஆளவிடக் கற்பித்தார் அங்கைச்சூ லத்தினிற்கங்
காளவிடக் கற்பித்தார் காப்பு. (96)

உட்புக்க போருதவிக் குற்றாரும் ...............
நட்புக்குத் தீங்கொழிக்கும் நன்னகரே – புட்புக்க
மாப்படையஞ் சக்கரத்தான் மன்னுயிர்காப் பானுயிர்க்குக்
காப்படையஞ் சக்கரத்தான் காப்பு. (97)

மண்பால் எவரும் மலையரசன் மாதரசும்
நண்பால் உறவழுத்தும் நன்னகரே – பண்பாம்பொன்
நாட்டுக் கவிப்புலவர் நண்ணவைத்தார் பத்திரன்கைச்
சீட்டுக் கவிப்புலவர் சேர்வு. (98)

மச்சுத் தலஞ்சோலை மாதர்முகம் வீதியுமண்
நச்சத் திரம்விளங்கும் நன்னகரே – கைச்செறியும்
மாலவச னத்தினார் ஆகமசித் தாந்தசைவ
சீலவச னத்தினார் சேர்வு. (99)

செண்பகக் காவும் தெருவீதி யும்மருவி
நண்பகல்தா வில்வளைக்கும் நன்னகரே – அன்பிலார்
தொண்டுக் கணைவிலான் துன்னார் புரம்பொடிக்கும்
விண்டுக் கணைவிலான் வெற்பு. (100)

மற்சங்கள் பாயும் வயலுமியல் வாணருங்கூன்
நற்சங்க முத்தமிழ்த்தேர் நன்னகரே – துற்சங்கத்(து)
ஏங்குமீ னக்கொடியார்க்(கு) எய்தார்தென் னாடுபுரந்(து)
ஓங்குமீ னக்கொடியார் ஊர். (101)

தாமத் தளிக்குலமும் சங்கீதக் கூடமுங்கண்
நாமத் தளமுழக்கு நன்னகரே – தாமுறுவார்
பாலைப்பந் திச்சடையார் பாகீ ரதித்தரங்க
மாலைப்பந் திச்சடையார் வைப்பு. (102)

மோகமத மாவும் முடிவேந்தர் பூந்தருவும்
நாக பதிநிகரா நன்னகரே – மாகமிலை
கூடலையாற் றூராதாம் கோட்டூர்க்(கு) இறைவர்திருக்
கூடலையாற் றூராதாம் கூறு. (103)

செல்லார்கா விற்பிறையும் செங்கால்வெள் ளோதிமமும்
நல்லார்பா வம்பொருவும் நன்னகரே – வெல்லும்
வரதிலக பூதரத்தர் மந்தர நீலசந்
திரதிலக பூதரத்தார் சேர்வு. (104)

முத்தூர முத்தூர மொய்குவளை யாம்பன்னி
நத்தூரு நத்தூரும் நன்னகரே – குத்துமருப்
பத்தியமி ராவணத்தான் ஆருரன் கையெழுத்துப்
பத்தியமி ராவணத்தான் பற்று. (105)

கோலவிட்ட மாமிபூங் கொத்தரும்பப் போற்றோம்தான்
ஆலவிட்ட ஊஞ்சல்எற்று நன்னகரே – நூலைவிட்டும்
சின்னவிடைப் பாகனார் செங்கமலம் பூத்தமுகில்
வன்னவிடைப் பாகனார் வைப்பு. (106)

நாகத்தின் மேனிலவோ நாகம் தவளமென்று
நாகத்தை நாகமெட்டும் நன்னகரே – நாகம்
அரைக்காட்டி நின்றார் அருக்கணிவார் தென்பால்
வரைக்காட்டி நின்றார் வரை. (107)

வந்தூர வந்தூர் மலையக்கால் வீசுநளி
நந்தூரு நந்தூரும் நன்னகரே – செந்தூர்
வருகுமர னார்மழலை மொழிக்குள்ள (தாகும்)
முருகுமர னார்சேர் ஊர். (108)

ஏமஞ்சா திப்புலத்தும் இம்மைமறு மைப்புலத்தும்
நாமஞ்சா தித்தகவா நன்னகரே – தாமக்
குழல்வாய் மொழியார் குலக்கரும்பாம் பங்கில்
குழல்வாய் மொழியார் குடி. (109)

ஏடகத்தார் வண்டின் இசையால் மலைவளதால்
நாடகக் குன்றியிசை நன்னகரே – நாடுமன்பர்
நாடீரக் கோடியார் நாட்கொளினும் காக்குமதிக்
கோடீரக் கோடியார் கோடு. (110)

தங்கள்அறங் கள்மல்க சந்தனப்பூஞ் சோலைமல்க
நங்கள்கிளை கள்மல்கும் நன்னகரே – திங்கள்
வழங்குதிரை யப்பன்அர வார்சடையான் வேதப்
பழங்குதிரை யப்பன் பதி. (111)

மட்டார் கமல வயலும்இடை மாமறுகு
நட்டார் குரவைபொங்கும் நன்னகரே – தொட்டவரி
அத்திரமன் றாடலார் அஞ்சப் புரத்தில்எய்த
சித்திரமன் றாடலார் சேர்வு. (112)

நன்னகர் வெண்பா முற்றும்.

திருச்சிற்றம்பலம்.

❀ ❀ ❀

# திருநீர்மலைச் சிலேடை வெண்பா

## விநாயகர் துதி

மன்னு திருநீர் மலைரங்க நாயகர்மேல்
பன்னுதமிழ்ப் பாமாலை பாடுதற்கு – மின்னுதுதிக்
கையுடையான் செல்வக் கணபதியாம் அன்பர்துதிக்
கையுடையான் தாள்மலர் காப்பு.

## காப்பு

மங்களஞ்சேர் நீர்மலையில் வாழ்ரங்க நாயகர்மேல்
துங்கமுறப் பாமாலை சூடுதற்கு – மங்குல்தவழ்
தண்டலைசூழ் தென்குருகூர் தான்வாழ் சடகோபன்
புண்டரிகப் பாதங்காப் பு.

## நூல்

சீர்பெறுபொன் மாமதிலும் திங்கள்தவழ் கோபுரமும்
நேர்பெறுவை குந்தநிகர் நீர்மலையே – ஏர்பறவை
கட்டியிலங் கைப்பிடித்தான் காழ்மிகுவெஞ் சூரர்குலம்
வெட்டியிலங் கைப்பிடித்தான் வெற்பு. (1)

தத்தைமொழி யார்களத்துத் தன்வயலிற் சங்கினத்தும்
நித்திலங்க ளோங்குதிரு நீர்மலையே – பத்துருவாய்க்
கொண்டா னடியருளாம் கொண்டான் திருவுரத்தில்
கொண்டான் தினமிருக்கும் குன்று. (2)

துய்யகவி ஞர்உளத்தும் தூயநக ரின்புறத்தும்
செய்யுள்மிக ஓங்குதிரு நீர்மலையே – பையரவப்
பள்ளியான் நான்மறையின் பள்ளியான் அன்பருக்கே
வள்ளியான் வாழும் மலை. (3)

வாழ்மறையோர் வீதியினும் வாவிப் புறத்தினிலும்
நீழ்கனலே வோங்குதிரு நீர்மலையே – காழ்மிகுத்த
அஞ்சக் கரத்தான் அருள்சக் கரத்தான்சொல்
மஞ்சக் கரன்வாழ் மலை. (4)

வீரர்தம் போர்க்களத்தும் மேகநுழை காவிடத்தும்
நேரலர்கள் ஏயுதிரு நீர்மலையே – பார்முழுதும்
ஓரடியாய்க் காட்டினான் ஓதுமறைப் பாட்டினான்
சீரடியாய்க் கண்டான் சிலம்பு. (5)

துங்கமணித் தெற்றியினும் தூயமலைச் சாரலினும்
செங்கதிரைக் காட்டுதிரு நீர்மலையே – கங்கையைமுன்
காட்டிப்பொன் தாளன்பைக் காளிங்கன் சென்னியின்மேல்
சூட்டிய பொற்றாளத் தார். (6)

பாடும் அடியார் பவக்கடலை நீந்தவொரு
நீடுமுயர் அம்பியதாம் நீர்மலையே – தேடரிய
மேனியான் பூவைநிற மேனியான் மேகநிற
மேனியான் வாழ்ந்திருக்கும் வெற்பு. (7)

வீக்கமல(டு) ஊமைமுட மெய்க்குருடு நோய்பலவும்
நீக்கமருந் தாயோங்கு நீர்மலையே – பாக்கியநல்
தாயகமா மன்பருக்குத் தண்டா தருள்ரங்க
நாயகர் வாழும் நகர். (8)

செஞ்சால்பமில் நாவலர்கள் செப்புகவிக் கற்பனைக்குள்
நெஞ்சிலடங் காதோங்கு நீர்மலையே – பஞ்சவர்க்கு
மெல்லத்தூ தாக்கினான் மேலும்அகலி கையாம்
கல்லைத்தூ தாக்கினான் காப்பு. (9)

மைபாயுங் கண்ணார்தம் வார்குழலில் பூக்கள்சொரி
நெய்பாய நெல்விளையு ம் நீர்மலையே – ஐயம்பெய்
வேளைமக வாய்படைத்; ான் விண்ணுலகும் மண்ணுலகும்
தாளைமிக வாய்படை ந்தான் சார்பு. (10)

காணரிய வீரேழு காசினியும் கீழாக்கி
சேணளக்க வோங்குதிரு நீர்மலையே – யாணர்மதிக்
கோட்டானைக் காத்தருளும் கோவமரர் போற்றிமகிழ்
தாட்டாளன் வாழும் தலம். (11)

வீங்குகதி ரோன்புரவி வேனிலிளைப் பாற்றுதற்கு
நீங்காமல் நீரருந்தும் நீர்மலையே - வாங்காத
சம்பத் துடையான் தமதடியார் ஏட்டதருள்
சம்பத் துடையான் தலம். (12)

ஆத்திபுனல் கொன்றையர வம்புலியும் சூடுகையால்
நீத்தையணி சங்கரர்நேர் நீர்மலையே - கூற்றனைய
கம்பத்தா னைப்புடைத்தான் கண்ணி தமைத்துதிக்கும்
கும்பத்தா னைக்கருள்வான் கோடு. (13)

பத்தர்படி வாவியினிற் பாய்கயல்கள் நீள்தாழை
நெற்றுகுற்று வானதிவீழ் நீர்மலையே - முத்தர்தொழும்
பூவைநிறத் தான்கமலப் பூவைநிறத் தான்சரண
மாவையுரத் தான்வாழ் மலை. (14)

மாமலையிற் கோவினங்கள் வானூ ரிடபத்தை
நேமித்தங் கங்கரக்கும் நீர்மலையே - காமலியும்
வேங்கடத்தர் தந்திகிரி வெற்பிடித்தான் முத்தரிடத்
தோங்கிடத்தான் வாழ்ந்தருள்வா ளூர். (15)

ஆடுமட வார்முலையும் அம்மலையின் சாரலினும்
நீடாரம் ஓங்குதிரு நீர்மலையே - ஏடாரும்
செங்கமல உந்தியான் தேவர்தொழு முந்தியான்
சங்கமல முந்தியான் சார்பு. (16)

கோதுகனிக் கிஞ்சுகங்கள் கூடுகள்தோ றுங்குலவி
நீதிமறை நூல்பயிற்று நீர்மலையே - போதமுறு
கண்ணபுரத் தான்குடந்தை காரகத்தான் நாரகத்தான்
உண்ணவுரத் தான்வாழ் மலை. (17)

துங்கவரைக் காழகிலில் சுற்றரவம் விண்ணில்வரு
திங்களைப்போய்க் கவ்வுதிரு நீர்மலையே - தங்கவுருக்
கொண்டான் எனையடிமை கொண்டான் பிறவியறக்
கொன்றான் அரசிருக்கும் குன்று. (18)

சாலுகமை ஈனல் தூரளமதி யாமெனவே
நீலோற் பலமலரும் நீர்மலையே - கோலத்
துருவெடுத்தான் வேயிசைத்தான் ஓங்கல் எடுத்தான்
திருவெடுத்தான் வாழும் சிலம்பு. (19)

வாழ்வயலில் சந்ததமும் வளர்சாலி விண்ணுலகில்
நீழ்சாலிக் கப்பாலாம் நீர்மலையே - தாழியினில்
வெண்ணையெடுத் துண்டான்சொல் வேதமடுத் துண்டான்பூ
மண்ணைஎடுத் துண்டான் மலை (20)

அத்தவளையார் செங்கையிலும் ஐந்தருவின் சோலையிலும்
நித்தம்வளை யோங்குதிரு நீர்மலையே - சத்தமிகு
ஆழியில்நத் தேந்தினான் அண்டபகி ரண்டமெலாம்
வாழியெனத் தேற்றினான் வாழ்வு. (21)

தேரோடும் ஆவணத்தில் சிறக்கக் கயல்குதித்து
நீரோ டுலாவுவயல் நீர்மலையே – காரோடும்
ஒத்ததிரு மேனியா ஓரா மிரம்மறைகள்
வைத்ததிரு மேனியான் வாழ்வு. (22)

கல்லருவி பொன்னும் கனகமணி யும்கரிய
நெல்லிகள்வெண் சாறைத்தரு நீர்மலையே – முல்லைநிலப்
பல்லா மிரமடவார் பாயலுக்குள் ளாகிமறை
சொல்லா மிரமுடையான் சூழ்வு. (23)

பம்மல் குளத்தில் பதுமமென ஓங்கியன்பர்
செம்மையளி மூசுதிரு நீர்மலையே – இம்மையிலே
காணப் படாதருள்வான் கற்றவர்க்குக் கண்ணுதலோன்
காணப் படாதுருவான் காப்பு. (24)

கோலமிகு பம்மல் குளவா ருதியினடு
நீலமலை போலோங்கும் நீர்மலையே – சீலைமுன்
தண்துவரை நாட்டினான் தண்கடலைத் தாழியெனக்
கொண்டுவரை நாட்டினான் குன்று. (25)

வான்பாடு கின்னரர்கள் வாயடங்க ஏழிசைத்
தேன்பாடி ஓங்குதிரு நீர்மலையே – மின்பாடு
கண்கவரு மின்னார் கவலையினால் தேக்கமலன்
மண்கவரு வாயான் மலை. (26)

பாரங்க மாங்கடல்நீர் பானுவலைக் கைக்கொண்டு
நீராஞ் சனங்காட்டும் நீர்மலையே – சீரங்க
பாதத்தான் வேதத்தான் பாற்கடலென் றோதிய
பேரொத்தான் வாழு முறை. (27)

தேன்தவழும் சாரலினில் சிங்கங்கள் யானையென
நீள்முகிலைத் தாவுதிரு நீர்மலையே – கோள்மிகுத்த
வில்லங்கம் கொண்டான் விரும்புமடி யார்க்காசை
சொல்லங்கம் கொண்டான் சிலம்பு. (28)

மெய்த்தவத்தோர் போற்றிசெய்ய மெய்யடியார் அன்புடன்
செய்த விழாவோங்கு நீர்மலையே – பற்றலர்கள்
சாகக் கணைதொடுத்தான் சானகிக்கா யோரிலங்கை
வேகக் கணைதொடுத்தான் வெற்பு. (29)

நன்மை அடியார் நடத்தும் திருப்பணிகள்
சென்மாவிடாய் நீக்குதிரு நீர்மலையே – வன்மக்
களையளைந்தான் இன்பக் கடலளித்தான் ஆயர்
அளைஅளைந்த வாயன் அகம். (30)

துன்னமதில் கோயில் நுசகம்பம் கண்டவர்கள்
சென்மம் அகற்றுதிரு நீர்மலையே – கன்மக்
கடல்கடந்தான் வானோர்கள் காணத் திருப்பாற்
கடல்கடந்தான் வாழ்ந்தருளும் காப்பு. (31)

ஆலையிற்பால் பாயும் அகல்வயல்கள் அப்புறத்தில்
சோலையில்மா லோங்குதிரு நீர்மலையே – கோலவுருக்
கொண்டவடி வேயுடையான் கோதில்புவி அண்டமெலாம்
நின்றவடி வாளன் நிலை. (32)

பேடன்ன மன்னார்தம் பெய்வளைக்கை யும்வயலும்
நீடன்னம் ஓங்குதிரு நீர்மலையே – ஏடவிழ்த்து
வாசிக்கும் தண்துளவன் வாங்காமல் அன்பர்தினம்
பூசிக்கும் தண்துளவன் பொற்பு. (33)

தங்கப்பொற் பாறையின்மேல் தான்துயிலும் கேசரிவிண்
சிங்கத்தைத் தாவுதிரு நீர்மலையே – இங்கிதஞ்சேர்
மச்சவுரு வாகினான் வானோர்கள் வந்துதொழப்
பச்சையுரு வானான் பதி. (34)

காவலர்கள் வீதியினில் கட்டுகொடி விண்ணுலகில்
தேவரிளைப் பாற்றுதிரு நீர்மலையே – தாவில்புகழ்
அஞ்சா யுதம்கொண்டான் அன்பருக்கு நீர்தாங்கு
மஞ்சா யிதம்கொண்டான் வாழ்வு. (35)

வேடமட வார்குரவின் மென்கனியைச் சேயெரனத்
தேடியணைத் தோங்குதிரு நீர்மலையே – வாடும்இடங்
கூடவரு வான்அன்பு கொண்டெழில்சேர் பாண்டவர்கள்
ஏவவரு வான்வாழ் இடம். (36)

மேவரிய அத்திகிரி வேங்கடமும் போற்றிவுயர்
தீவகமாய் ஓங்குதிரு நீர்மலையே – மூவுலகும்
ஓங்குதிரு மேனியான் ஓதரிய மாவலியால்
வாங்குதிரு மேனியான் வாழ்வு. (37)

ஆர்த்த கடலொலிபோல் ஆதிமறை வேதியர்கள்
தீர்த்தர்மிக ஓங்குதிரு நீர்மலையே – பார்த்திபற்குத்
தேர்ப்பாகன் ஆயிருந்தான் தேவர்துதி புள்ளரசை
ஊர்பாகன் ஆயிருந்தான் ஊர். (38)

பாணளக்கும் அரக்கர் பயிலுமணிக் கோபுரங்கள்
சேணளக்க ஓங்குதிரு நீர்மலையே – ஆணமிகும்
சங்கிடத்தில் கொண்டான் தமதடியார் தங்களுக்குச்
சங்கிடத்தைக் கொண்டான் தலம். (39)

நந்துமணி ஆரம் நவிலெகினம் தாங்குகையால்
சிந்துவெனக் காட்டுதிரு நீர்மலையே – செந்திருவை
மெய்வடிவில் காட்டினான் மேவலர்கள் மாளவொரு
கைவடிவில் காட்டினான் காப்பு. (40)

வெற்றிபெறு நால்வருணர் வீறுமனை கள்தோறும்
நித்திய கல்வியரு நீர்மலையே – தத்துவரி
காட்டினான் ஐம்புலனும் காட்டினான் பைந்துளபக்
காட்டினான் வாழ்ந்தருளும் காப்பு. (41)

கம்புலவு வாவியிரும் காழகில்சேர் சாரலினும்
செம்பதும் மல்குதிரு நீர்மலையே – உம்பர்தொழும்
வைகுந்த நாட்டினான் வாளரக்கர் மாளவொரு
வைகுந்த நாட்டினான் வாழ்வு. (42)

கொந்தலர்சூழ் பம்மல் குளம்புவிசூழ் முத்திரையார்
சிந்துவைப்போல் ஓங்குதிரு நீர்மலையே – முந்தியதன்
பேரியற் கதிரொளித்தான் பேய்முலைப்பால் உண்டுபண்டு
போரிற் கதிரொளித்தான் பெற்பு. (43)

அவ்வியங் கள்தீர் அடியார் திருப்பணிசெய்
திவ்வியமா யோங்குதிரு நீர்மலையே – கொவ்வையிதழ்
மாதரையெ லாமிரந்தான் வாய்திறந்து மாவலிபால்
மாதரையெ லாமிரந்தான் வாழ்வு. (44)

தேக்கும் பிறவிமுதல் தீவினைகள் யாவினையும்
நீக்கவொரு சஞ்சிவியா நீர்மலையே – நீக்கரிய
கோக்களையெ லாங்காத்தான் கூறுமொரு நால்வகையான்
மாக்களையெ லாங்காத்தான் வாழ்வு. (45)

மாயக் கவலை மயக்கொழித்து மெய்ஞ்ஞான
நேயக் கதியுதவுந் நீர்மலையே – தூயமணி
வண்ணவுருக் கொண்டான் மணிகண்டன் அன்புருகி
எண்ணவுருக் கொண்டான் இடம். (46)

பச்சை மணியொளிவிண் பாய்கிரணம் புல்லெனவே
நிச்செயவிண் ணாக்கிறக்கும் நீர்மலையே – அச்சகடை
சாடினான் ஆயர் தமதுவெண்ணை நெய்தயிர்பால்
தேடினான் வாழும் சிலம்பு. (47)

தட்டுப் புழுக்குவிளை சாரற் களிக்கொடிவிண்
நெட்டார் தருப்படரும் நீர்மலையே – கட்டார்
விதுரன்விருந் தாகினான் வேண்டும் அடியார்
மதுரவிருந் தாகினான் வாழ்வு. (48)

முல்லைக்கு நேரெயிறு மொய்குழலார் தண்வயலில்
நெல்லிக்குப் போலோங்கு நீர்மலையே – செல்லைப்போல்
கூந்தலார் தங்களிடம் கொங்கைக் குவடமிழ்ந்து
மாந்தனெனைக் காப்பான் வரை. (49)

ஏர்கருணை யோதனம்பால் யாசகருக் கேயருளும்
சீர்கருண ரோங்குதிரு நீர்மலையே – ஏர்கருட
புள்ஒரு மாவுரத்தான் பூந்துளப தாமமுகும்
கள்ளெறு மாவுரத்தான் காப்பு. (50)

எட்டுதிசைக் கடலும் ஏகிபவித் திருனான்
நெட்டியென வோங்குதிரு நீர்மலையே – பட்டர்க்கு
உரிய திருவடியான் ஓதரிய கிறதிப்
பெரிய திருவடிமேற் பேறு. (51)

உத்தவமாம் வான்றருவில் ஒண்கோ டொடித்தானை
நித்தம் பிடிக்கருத்து நீர்மலையே – வித்தகமாம்
குட்டவுரு வாயெடுத்தான் கோவியர்பால் வீறுமுனி
எட்டவுரு வாயெடுத்தான் இல். (52)

துங்க வயிரத்தின் தூயகதிர் நீரெனவே
திங்கள்முயல் உண்ணுதிரு நீர்மலையே – தங்கமணி
தானையான் விண்ணவர்கள் தானையான் தாழ்விலருள்
சோனையான் வாழ்ந்தருஞ் சூழ்வு. (53)

வாலச்செங் காந்தள்மிசை வண்டுபடிந் தேயெழுதல்
நீலக்கழுங் கைநிகர் நீர்மலையே – சீல
மலைஎடுத்தே யாப்புரந்தான் வாளரக்கர் மாளச்
சிலைஎடுத்தே மேற்றுரந்தான் சேர்வு. (54)

நாலுவரு ணத்தருமெய்ஞ் ஞானியரு மேன்மேலும்
சீலமுடன் ஓங்குதிரு நீர்மலையே – பால
வடிவாகிப் பேய்முலைப்பால் வாயால்உண் டாங்கு
நெடியவுயிர் உண்டான் நிலை. (55)

மிஞ்சியணிந் தேவுயரும் வேதாங்கும் பாகவதர்
நெஞ்சமென வோங்குதிரு நீர்மலையே – வஞ்சகநோய்
சேரா தவரிடத்தில் சேரவல்லான் பண்டுமயல்
சேரா தவரிடத்தான் சேர்வு. (56)

ஞாலமா ம் யாவினுக்கும் தண்டா தருள்கருணை
நீலவட் ட மாமுகிலாம் நீர்மலையே – சூலையிட்ட
மாலைப்போ லேயுருவான் வஞ்சகரைத் தான்கடிவான்
சேலைப்போ லேவடிவான் சேர்வு. (57)

வாதபித்த காசமுடன் பாருத பாண்டுமுதல்
சீதநோய் நீக்குதிரு நீர்மலையே – போதைநித்தம்
சூட்டிக் கொடுக்கவண் தோளுடையான் வைகுந்தம்
காட்டியடி யார்க்கருள்வான் காப்பு. (58)

தத்தையர்கள் ஏனல்தண் தன்னிலிவந் தேகுருகை
நித்திலத்தா ஓட்டுதிரு நீர்மலையே – பத்தருக்காய்ப்
பெண்ணையா ணாக்கினான் பேரமரர் காணவொரு
மண்ணையு ணாக்கினான் வாழ்வு. (59)

கும்பமுலை யாரிதழும் கோகனக வாவியினும்
செம்பவள மோங்குதிரு நீர்மலையே – தம்பதத்தைத்
தாயகமாய்க் கண்டான் சகல உயிர்க்குமிராய்
நாயகமாய் நின்றான் நகர். (60)

பஞ்சகலாத் தாட்கமலப் பைந்தொடியார் கும்தருமம்
நெஞ்சகலா தோங்குதிரு நீர்மலையே – வஞ்சகம்செய்
நாகபா சந்தவிர்த்தான் நம்புமடி யார்தமக்குச்
சோகபா சம்தவிர்த்தான் சூழ்வு. (61)

மெய்யாம்பல் வாவியினும் மேல்தவர்வாழ் சாரலினும்
செய்யாம்பல் ஓங்குதிரு நீர்மலையே – துய்யாம்பல்
வேங்கடம் நீள்மல்லை வெஃகாமைப் புட்குழியாம்
ஓங்குதலத் தான்மேவும் ஊர். (62)

கொக்கின் தலைமேல் குயில்பிள்ளை பாடுமிசை
திக்கெங்கும் ஓங்குதிரு நீர்மலையே – செக்கர்நிறச்
சக்கரத்தான் தண்துளபத் தாமத்தான் நெட்டெழுத்தாம்
அக்கரத்தான் வாழும அகம். (63)

ஏடவிழ்த்து வாசித்(து) இனிய ரசமறியும்
நீடளிகள் ஓங்குதிரு நீர்மலையே – காடளியா
நெஞ்சக் குடியிருக்கான் நேசஅடியார் இதயக்
கஞ்சங் குடியிருக்கான் காப்பு. (64)

போரடிக்கும் மள்ளர் புயலைக் கடாஎன்றே
நேராக ஏர்கட்டும் நீர்மலையே – வார்படைத்த
சொக்கத்தா ரைப்புணர்ந்தான் தூயமறை போற்றவுயர்
சொக்கத்தா ரைப்புணர்ந்தான் சூழ்வு. (65)

சாலவரை விண்ணிலெழும் தண்கிரணம் அம்புலியின்
நீலக் கறைநீற்றும் நீர்மலையே – கோலத்தின்
மெய்வடிவில் கொண்டானோர் வேலைகடை போதுபெண்ணாய்ப்
பெய்வடிவு கொண்டான் பொருப்பு. (66)

ஆதிக் கலைமகளுக் கானனமாய் அம்புயத்தாள்
நீதிக் கொருவரையாம் நீர்மலையே – சோதிக்கச்
சோதியாய் அப்புறமாய்த் தூண்டா மணிவிளக்காய்
நீதியாய் நின்றான் நிலை. (67)

புட்குழிநீள் சோலைமலை பூந்துருத்தி வேங்கடத்து
நிட்களமா யோங்குதிரு நீர்மலையே – வெட்கடையும்
தானல்லா தில்லாத தானும் தமியேனை
தானல்லா தான்விடான் சார்பு. (68)

பச்சைக் கமுகுவிடும் பாளைகதிர்ப் பாகனுக்கு
நிச்சயநற் சாமரையாம் நீர்மலையே – செச்சைமலர்
தோட்டணியான் பாற்கடலான் துங்க அயோத்தியெனும்
நாட்டணியான் வாழும் நகர். (69)

ஊடுமட வார்நீத்த ஒண்கலன்கள் வான்மின்னூர்
நீடமரர் தோட்கணியும் நீர்மலையே – கோடுயர்(ந்து)
நின்றமரு தைப்புடைத்தான் நேயமுடன் அன்பர்வினை
குன்றவிரு தைப்புடைத்தான் குன்று. (70)

வாரலரும் கொங்கை மடவார் நடைக்கன்னம்
நேரவென் றையங்கொள் நீர்மலையே – ஏரார்
திருமலைவாழ் மல்லையுடன் சேர்குடந்தை ஆழ்வார்
திருநகரில் வாழ்வான் சிலம்பு. (71)

செய்கமலம் மீதில் செழுமா நறுங்கனியின்
நெய்சொரிய ஓங்குதிரு நீர்மலையே – மெய்யாம்
திருமுட்டம் சீரங்கம் சித்திரகூ டம்சொல்
வருமிடத் தான்வாழ் மலை. (72)

உத்தமவிண் மாதர் உயர்புரிசை மாதருடன்
நித்திலப்பந் தாடுதிரு நீர்மலையே – சித்திதரும்
வேலைக்கோ ரம்பிட்டான் வெவ்வினையேன் வெம்பிறவி
வேலைக்கோ ரம்பிடுவான் வெற்பு. (73)

ஆடகயாழ் வாசிக்கும் ஆயிழையார் பண்வினவ
நீடமரர் வந்துலவும் நீர்மலையே – தோடவிழ்பூப்
பொய்கையார் பூதத்தார் போற்றுமடி யார்க்கருளும்
செய்கையார் வாழும் சிலம்பு. (74)

பத்திவிடும் வெம்படிமப் பாறைகளால் அங்கிபங்கள்
நித்தியவெள் ளாம்பல்தாம் நீர்மலையே – சுத்தகுண
பாகவதர் உள்ளத்தான் பாடுமடி யார்பிறவி
நோகவரும் உள்ளத்தான் நோக்கு. (75)

நாயகமாய் நான்முகமும் நன்கமல வன்னமிசை
நேயமதாம் கஞ்ச(திரு) நீர்மலையே – தூயசிங்க
மாய்த்தூணில் வந்துதித்தான் மாகடலில் ஓங்கியொழுங்
காய்த்தூணில் (கண்)வளர்வான் காப்பு. (76)

தேவருடை நற்காம தேனுமடி யில்கயல்கள்
நீவியிடப் பால்சொரியும் நீர்மலையே – ஓவியம்நேர்
பெண்ணின்வடி வாகினான் பேயின்முலைப் பாலுண்டு
விண்ணின்வடி வாகினான் வெற்பு. (77)

தென்றல் அசையச் செழுங்கமலத் தோதிமம்வேய்
நின்றாடு கூத்தர்நீள் நீர்மலையே – எண்பேர்
கருவடிவாய்க் காட்டினான் காணா மறையை
உருவடிவாய்க் காட்டினான் ஊர். (78)

பாரில்இழி யும்அருவி பாந்தளரி வேங்கைபரி
நீரிவிழி யக்கொணரும் நீர்மலையே – கூரியதோர்
சங்கம் தரித்தார் சடகோபன் சொற்றபிர
சங்கம் தரித்தார்வாழ் சார்பு. (79)

இக்கொடித்து மா ளர்தினம் ஏர்கடவ முத்துதிர்ந்து
நிற்குமொளி விண்ணளவும் நீர்மலையே – சக்கரத்தை
விட்டுக் கதிர்மறைத்தான் வேண்டுமடி யார்(பிறவி)
விட்டுக் கதியளித்தான் வெற்பு. (80)

வண்டிசைக்கச் செந்தா மரைத்தோட்டில் ஓதிமம்கால்
நின்றிசைக்கக் கண்வளரும்நீர்மலையே – பண்டிசைக்கும்
பாகவதத் தர்நமரர் பாடவரி தாகவுயர்
யோகபுரத் தான்வாழும் ஊர். (81).

வித்துருமென் கோடி வெயின்மிசை யேறியது
நித்தியமால் தேவியதாம் நீர்மலையே – முத்தனையார்
ஏறியகத் தாமரையான் ஏழ்புவனம் உண்டுமிழ்ந்து
நாறியபொன் தாமரையான் நாடு. (82)

தூயமறை யோருளத்துள் துங்கவரைச் சாரலினும்
தீயதிவிட்(டு) ஓங்குதிரு நீர்மலையே – போயசுரர்
தேக்குமர மொத்தான் சிறியேன் மனக்கவலை
மாய்க்குமர மொத்தான் வரை. (83)

மன்றல்தமிழ் வாயார் மணிவாய் அமுதருந்த
நின்றிரங்கும் வானவர்சூழ் நீர்மலையே – வண்தகைய
கண்ணா மிரத்தான்(கண்) காணரியான் ஆழ்வார்சொல்
எண்ணா மிரத்தான் இடம். (84)

அண்டம் முழுதளந்(து) அப்பால் உலகளக்க
நின்றவுயர் தம்பதமாம் நீர்மலையே - வண்டளைய
கோட்டத்தான் அன்பர்தொழு கோகனகப் பூவனைய
நாட்டத்தான் வாழும் நகர். (85)

வேர்சந் தனத்தருவும் வேசியர்கள் வார்களப
நேர்தனமும் பன்னகமார் நீர்மலையே - ஓர்கனக
வத்திரத்தான் அன்பருக்கு வாழ்வருள்செய் மெய்ஞ்ஞான
வத்திரத்தான் வாழும் மலை. (86)

வாழ்மடவார் கொங்கையிலும் மாடத்து மாலையவாம்
நீழ்சந் தனமலியும் நீர்மலையே - தாழும்
திருக்குளத்தில் சேராதான் திண்கடல்நேர் பம்மல்
திருக்குளத்தில் சேர்வான் சிலம்பு. (87)

வாழ்மலையின் சாரலினும் மாமறையோர் வீதியினும்
நீழ்கலைகள் கூடிவளர் நீர்மலையே - தாழ்வுபடா
மத்தவதா ரத்தான் பதுமமலர் மாளிகைமேல்
உத்தவதா ரத்தான்வாழ் ஊர். (88)

சித்திடையார் தோளகத்தும் தெய்வமலைச் சாரலினும்
நித்தம்பொன் னால்மருவும் நீர்மலையே – துத்திமிகுங்
காலாயி ரம்உ டையான் கண்செவியான் ஆழ்வார்சொல்
நாலாயி ரம்உ டையான் நாடு. (89)

தூயமட வார்விழியும் துங்கமலைப் பக்கத்தும்
நேயமணி மைநிறையும் நீர்மலையே – தீயகொடும்
கார்முகவப் பாணியார் காலனைநேர் சூரனொடு
போர்முகவப் பாணியார் பொற்பு. (90)

வற்க(டம்சேர் காலத்தும்) வண்மை வயலிடத்தும்
நெற்கதிரைக் காட்டுதிரு நீர்மலையே – சேராட்
பருத்துளசிக் காகத்தான் பண்பயிலும் தேனார்
திருத்துளசி யாகத்தான் சேர்வு. (91)

வஞ்சவன வேடுவரும் வாணுதல்வேற் கண்ணியரும்
நெஞ்சில் தருமம்அறா நீர்மலையே – பஞ்சவடி
நீழலான் விண்ணளக்கும் நேமியான் பூவெடுத்த
கேழலான் வாழும் கிரி. (92)

செய்ய கமலமிசை தேமா நறைவீழல்
நெய்சொரியும் அங்குநிகர் நீர்மலையே – செய்யவளைத்
தாங்கியவில் கைத்தலத்தான் தண்டா(து) அசுரர்குலம்
வாங்கியவிந் தைத்தலத்தான் வாழ்வு. (93)

குன்றில்வளர்ந் தோங்கரம்பை கோகனகப் பொன்னுலகில்
நின்றரம்பை யர்பாலாம் நீர்மலையே – தொண்டுமிகும்
அன்பருளக் காணியான் ஆலிலைமேல் பள்ளிகொள்ளும்
அன்பருளக் காணியான் வாழ்வு. (94)

நீர்கள் கடக்குமலை நீள்வரையில் நேருயர் (நெறியுயர்)
நீர்கள் கட்டுமுறு நீர்மலையே – வார்கள்
முலையார்க் காசையான் பொன்னுலகம் போற்ற
வருமலையாட் காசையான் வாழ்வு. (95)

(இப்பாடல் பிழையாக உள்ளது)

புண்டரிகப் பூமிசையும் பொன்னருவிச் சாரலினும்
நின்றரிகள் ஓங்குதிரு நீர்மலையே – தொண்டர்தொழும்
மன்புக்க ளாகினான் வார்க்கும் அசுரர்குல
வன்புக்க ளாகினான் வாழ்வு. (96)

ஊடுமட வார்நிசியும் வொண்பொன்மின் காவிடத்தும்
நீடஞ் சுகமாகும் நீர்மலையே – கோடனைய
பெத்தவணி மேனியான் பேரா யிரமுடையான்
வைத்ததிரு மேனியான் வாழ்வு. (97)

வாளஞ் சனமடவார் ஆடிடத்தும் வெற்பிடத்தும்
நீள்மஞ் சரியகலா நீர்மலையே – போழாம்
மாட்டியருள் நாயகனார் மஞ்சா தரக்கர்குலம்
வாட்டியருள் நாயகனார் வாழ்வு. (98)

வார்காஞ் சனங்காட்டும் மாதர்முலை யும்மாலையும்
நேர்காஞ்சி காட்டுதிரு நீர்மலையே – சீகாஞ்சிப்
பேரூரில் ஓர்பெண்ணைப் பின்னைவடி வாங்கிவைத்த
காரணனார் வாழ்ந்தருளும் காப்பு. (99)

உத்தமஞ்சேர் ஆழ்வார்க்கும் ஓதுமறை யோர்பிறர்க்கும்
நித்தம் பதமருளும் நீர்மலையே – ஒத்தமறை
வீட்டினான் உள்உகந்து மெய்வருந்தும் அன்பர்வினை
வீட்டினான் வாழந்தருள்வான் வீடு. (100)

முற்றும்

## நன்னகர் வெண்பா - செய்யுள் முதற்குறிப்பகராதி

| செய்யுள் முதற்குறிப்பு | செய்யுள் எண் |
|---|---|
| அஞ்சொலவர் | 81 |
| அத்தே | 82 |
| அந்தமிலா | 71 |
| ஆக | 10 |
| ஆடகமு | 51 |
| ஆடலிளை | 77 |
| ஆடுசங்கூர் | 50 |
| ஆடுமரு | 34 |
| ஆழியபாட் | 32 |
| ஆற்றி | 8 |
| இற்சாதி | 44 |
| இன்னகர் வெண் | 1 |
| ஈரத்தண் | 57 |
| உட்புக்க | 97 |
| உள்ளாற்றுப் | 47 |
| ஏடகத்தார் | 110 |
| ஏமஞ்சா | 109 |
| ஏலுமறை | 40 |
| கல்லார | 66 |
| காப்புடைய | 83 |
| காமவே | 4 |
| காலாங் | 45 |
| காவலர்பாட் | 56 |
| காவிநயம் | 68 |
| கூட்டார் | 55 |
| கொண்டல்வர | 64 |

| செய்யுள் முதற்குறிப்பு | nraAs ; vz |
|---|---|
| கொத்தேறு | 76 |
| கொம்பானை | 30 |
| கொம்பிறகால் | 15 |
| கோட்டே(று) | 90 |
| கோண்மா | 92 |
| கோயில் | 20 |
| கோலமலர் | 61 |
| கோலவிட்ட | 106 |
| சந்ததம்நான் | 69 |
| சந்தனவ | 46 |
| சந்தாடு | 85 |
| சாறயர்வ | 18 |
| சீகர் | 35 |
| சீத | 87 |
| சூரத்(தை) | 16 |
| செண்பக | 100 |
| செந்தா | 22 |
| செந்தா | 60 |
| செம்பொன்மணி | 39 |
| செல்குரவோர் | 29 |
| செல்லார்கா | 104 |
| செல்வமலி | 43 |
| சேம | 6 |
| சேரும் | 28 |
| சொன்முத்த | 73 |
| தங்கள்அறங் | 111 |
| தாட்பார்க்கு | 74 |
| தாம | 102 |
| தூலஞ்சேர் | 59 |

| செய்யுள் முதற்குறிப்பு | செய்யுள் எண் |
|---|---|
| தென்காற் | 79 |
| தேங்குழலாள் | 36 |
| தேஞ்சேர்க்கு | 95 |
| தேடும் | 9 |
| தோகைமயில் | 65 |
| நாகத்தின் | 107 |
| நீளவார | 33 |
| பண்பாங் | 5 |
| பாடீர | 7 |
| பாரமென | 12 |
| பாவிரச | 96 |
| பாவுடைய | 52 |
| பானா | 26 |
| பானாட்ட | 72 |
| புண்படா | 48 |
| பூகமணி | 78 |
| பூட்டார் | 62 |
| பூணவிர்தோள் | 49 |
| பூணும்வில்லு | 11 |
| பூவாய | 2 |
| பேதம் | 84 |
| பொற்சந்த | 70 |
| பொன்பார் | 94 |
| பொன்றாத | 37 |
| போகியர்பால் | 75 |
| போற்றிசைக்கும் | 92 |
| மச்சு | 99 |
| மட்டார் | 112 |
| மண்பால் | 98 |
| மற்சங்கள் | 101 |

| செய்யுள் முதற்குறிப்பு | செய்யுள் எண் |
|---|---|
| மாகமுகில் | 14 |
| மாகனக | 89 |
| மாமா | 54 |
| மால்வார | 58 |
| மாலெய்து | 53 |
| மின்கால் | 19 |
| மின்னகுவேற் | 86 |
| முத்தனையார் | 27 |
| முத்தூர | 105 |
| முன்கிளையார் | 25 |
| மேகமன்ன | 42 |
| மைக்கேச | 80 |
| மைந்தர்க்கு | 24 |
| மொய்வளையார் | 13 |
| மோக | 63 |
| மோகநிலா | 38 |
| மோகமத | 103 |
| மோகமுனி | 67 |
| வந்தூர | 108 |
| வன்புலம்வென் | 93 |
| வாட்டம் | 23 |
| வாளாந் | 88 |
| விம்பவா | 41 |
| வேட்காமன் | 17 |
| வேட்டங்கு | 3 |
| வேண்மாரி | 31 |


(21-ஆம் பாடலின் முதல் வரி விடுபட்டுள்ளது)

# திருநீர்மலைச் சிலேடை வெண்பா
## செய்யுள் முதற்குறிப்பகராதி



| செய்யுள் முதற்குறிப்பு | செய்யுள் எண் |
|---|---|
| அண்டம் | 85 |
| அத்தனையார் | 21 |
| அவ்வியம் | 44 |
| ஆடகயாழ் | 74 |
| ஆடுமட | 16 |
| ஆத்திபுனல் | 13 |
| ஆதி | 67 |
| ஆர்த்த | 38 |
| ஆலையிற்பால் | 32 |
| இக்கொடித்து | 80 |
| உத்தமஞ்சேர் | 100 |
| உத்தமவிண் | 73 |
| உத்தவமாம் | 52 |
| ஊடுமட | 70 |
| ஊடுமட | 97 |
| எட்டுதிசை | 51 |
| ஏடவிழ்த்து | 64 |
| ஏர்கருணை | 50 |
| கம்புலவு | 42 |
| கல்லருவி | 23 |
| காணரிய | 11 |
| காவலர்கள் | 35 |
| கும்பமுலை | 60 |
| குன்றில்வளர்ந் | 94 |
| கொக்கின் | 63 |
| கொந்தலர்சூழ் | 43 |
| கோதுகனி | 17 |

| செய்யுள் முதற்குறிப்பு | செய்யுள் எண் |
|---|---|
| கோலமிகு | 25 |
| சாலவரை | 66 |
| சாலுகழை | 19 |
| சித்திடையார் | 89 |
| சீர்பெறுபொன் | 1 |
| செஞ்சால்பயில் | 9 |
| செய்கமலம் | 72 |
| செய்ய | 93 |
| தங்கப்பொற் | 34 |
| தட்டு | 48 |
| தத்தைமொழி | 2 |
| தத்தையர்கள் | 59 |
| தாலவடம் | 57 |
| துங்க | 53 |
| துங்கமணி | 6 |
| துங்கவரை | 18 |
| துய்யகவி | 3 |
| துன்னமதில் | 31 |
| தூயமட | 90 |
| தூயமறை | 83 |
| தென்றல் | 78 |
| தேக்கும் | 45 |
| தேரோடும் | 22 |
| தேவருடை | 77 |
| தேன்தவழும் | 28 |
| நந்துமணி | 40 |
| நன்மை | 30 |
| நாயகமாய் | 76 |

| செய்யுள் முதற்குறிப்பு | செய்யுள் எண் |
|---|---|
| நாலுவரு | 55 |
| நீர்கள் | 95 |
| பச்சை | 47 |
| பச்சை | 69 |
| பஞ்சகலா | 61 |
| பத்தர்படி | 14 |
| பத்திவிடும் | 75 |
| பம்மல் | 24 |
| பாடும் | 7 |
| பாணளக்கும் | 39 |
| பாரங்க | 27 |
| பாரில்இழி | 79 |
| புட்குழிநீள் | 68 |
| புண்டரிக | 96 |
| பேடன்ன | 33 |
| போரடிக்கும் | 65 |
| மன்றல்தமிழ் | 84 |
| மாமலையிற் | 15 |
| மாயக் | 46 |
| மிஞ்சியணி | 56 |
| முல்லைக்கு | 49 |
| மெய்த்தவத்தோர் | 29 |
| மெய்யாம்பல் | 62 |
| மேவரிய | 37 |

| செய்யுள் முதற்குறிப்பு | செய்யுள் எண் |
|---|---|
| மைபாயுங் | 10 |
| வஞ்சவன | 92 |
| வண்டிசைக்க | 81 |
| வற்க(டம்சேர்காலத்தும்) | 91 |
| வாதபித்த | 58 |
| வார்காஞ் | 99 |
| வாரலரும் | 71 |
| வாலச்செங் | 54 |
| வாழ்மடவார் | 87 |
| வாழ்மலையின் | 88 |
| வாழ்மறையோர் | 4 |
| வாழ்வயலில் | 20 |
| வாளஞ் | 98 |
| வான்பாடு | 26 |
| வித்துருமென் | 82 |
| வீக்கமல(டு) | 8 |
| வீங்குகதி | 12 |
| வீரர்தம் | 5 |
| வெற்றிபெறு | 41 |
| வேர்சந் | 86 |
| வேடமட | 36 |

# இந்நூல்களைப் பற்றி

சிலேடை என்பது மிகச்சுவையானதோர் அலங்காரமாகும். சிலேடித்த இடத்தில் உள்ள இருபொருள்களைக் கண்டு பிடித்தவனுக்கு ஏற்படும் மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. சிலேடை வைத்துப்பாடுவதே பெரிய கவிஞனுக்கு அடையாளமாக ஒரு காலத்தில் கருதப்பட்டது. சிலேடைப் பாடல்களுக்கு அடித்தளம் என்று காளமேகப் புலவனைக் கருதலாம்.

**நன்னகர் வெண்பா:**

இது திருக்குற்றாலத்தைப் பற்றியது. ஊரின் வளமும் இறைவனின் பெருமையும் இந்த நூலின் பாடல்களில் நன்கு உரைக்கப்பட்டுள்ளன. இலக்கியச் சுவையும் பக்திச் செறிவும் ஒருங்கமைந்த நூல் என்று இதனைக் குறிப்பிடலாம்.

**திருநீர்மலைச் சிலேடை வெண்பா:**

இது திருநீர்மலை என்னும் வைணவத்திருத்தலம் பற்றிய சிலேடை இலக்கியமாகும். அம்மலையின் உயர்வையும் மாண்பையும் சிறந்த கற்பனை நயத்துடன் வியக்கும் பாடல்கள் சுவைக்கத் தக்கனவாக உள்ளன.

இந்த இரண்டு ஊர்ப்பேர்ச் சிலேடை வெண்பா நூல்களில் ஒன்று சைவம் சார்ந்தது; ஒன்று வைணவம் சார்ந்தது. அதனால் இப்பதிப்பு சமய இணைப்புப் பதிப்பாகிறது. வேறுபட்ட சமய நூல்களாயினும் இலக்கியச் சுவையில் ஒன்றுபடுகின்றன.

**ஞா.மேகலா**
பதிப்பாசிரியர், நூலகப் புலவர்.
டாக்டர். உ.வே.சா. நூல்நிலையம்.